# "ஆலங்குடி சோலை விநாயகர் பதிகம்"

&

# "போற்றிகள் நூற்றிஎட்டு"



இயற்றியவர்: பலவான்குடிப் புலவர்
பேராசிரியர் வே.வேலப்பன்
எம்.ஏ (தமிழ்), எம்.ஏ (ஆங்கிலம்), பி.ஓ.எல்,பி.லிட்.,
பி.டி, ரா.பா. (இந்தி), ஏ.எச்.எம். கல்வித்துறை
அரசுப் பள்ளி ஆலங்குடி. 623 307

# "ஆலங்குடி சோலை விநாயகர் பதிகம்"

&

4494
Δ2,111(பரிசு)

# "போற்றிகள் நூற்றிஎட்டு"





இயற்றியவர்: பலவான்குடிப் புலவர்

பேராசிரியர் **வே. வேலய்யன்**

எம்.ஏ (தமிழ்), எம்.ஏ (ஆங்கிலம்), பி.ஓ.எல்,பி.லிட்.,
பி. டி, ரா.பா. (இந்தி), ஏ.எச்.எம். கல்வித்துறை

அரசுப் பள்ளி ஆலங்குடி. 623 307

அன்பளிப்பு

ஆலங்குடி கிராமத்தார்கள்

பழ.நடராசன் அம்பலம் அவர்கள்

திருப்பணிக் குழுத் தலைவர் &

அரசுயர் பள்ளி

ஆட்சிக் குழுத் தலைவர்

வெளியீடு :

அன்னை பொன்னம்மாள் பதிப்பகம்

வே. வே. வே. மனை

பலவான்குடி-623 208.

ப. மு. மாவட்டம்

12-12-1986

உ
சிவமயம்

# "ஆலங்குடி சோலை விநாயகர் பதிகம்"

## காப்பு

தோப்புக் கனிபோல் சுவைக்கின்ற பாக்கனிகள்
கூப்பும் கரத்தில் கொடுத்தென்னை ஆட்கொள்வாய்
யாப்புக்குள் வெண்பாவில் வேலப்பன் முப்பாகக்
காப்புக் கடவுளே காண்.

## வேண்டுதல்

ஆலங் குடிசோலை ஆதிபல வாங்குடியின்
கோலமிகக் காக்கும் குலமகனே—நீலவான்
போல உயர்பதவி பொங்கிவரும் கங்கையெனச்
சாலவே தாராய் தழை-த்து

## நூல்

அலைமகள் நல்கும் அரும்பெரும் செல்வம்
கலைமகள் நல்கும் கவின்பெரும் கல்வி
மலைமகள் நல்கும் மகத்தான வீரம்
தலைமகனே வாராய் தழைத்து

ஆலங் குடியமர்ந்த சோலை விநாயகரே!
கோல மயில்வேலன் கூடப் பிறந்தவரே!
பாலமென வந்து பரிந்துஉவந்து காத்தருள்வீ!
சீலமுடன் தந்து சிறந்து.

இலுப்பைமர நெய்விளக்கை ஏந்திமகிழ் வோரே!
உலுப்பும் புளியமரம் உற்றுப்பெற் றோரே!
அலுப்புமிகத் தட்டாமல் ஆருயிரைக் காப்பீர்
வலுப்பெறவே தாரீர் வளம்.

ஈயென வந்தவர்க்(கு) இரட்டை விநாயகரே!
தாயெனவே தாமெழுந்து தண்ணீராய்த் தான்பாய்ந்து
காயென வாழ்வாரைக் கனியாக்கும் தெய்வம்தான்
நீயெனயாம் வந்தோம் நினைந்து.

உண்மையும் வாய்மையும் மெய்மையும் தந்தருள்வாய்
பெண்மையுடன் ஆண்மைக்குப் பேரின்பம் தந்தருள்வாய்
தண்மை நிலமாம் தமிழால் நலமாக
வண்மை அருள்வாய் வளர்ந்து.

ஊக்கமிகு வேலப்பன் ஓங்குதமிழ்ப் பேராசான்
ஆக்கமுயர் வேங்கடமாய் ஆர்ந்துவரச் சேர்ந்தருள்க!
காக்கும் கருணைக் கணபதியே போற்றுகிறேன்
பூக்கும்என் நாவாற் பொலிந்து.

எல்லையின்றிக் காத்தருளும் தில்லைநட ராசரே!
முல்லைப்பூ வாயழகுப் புன்முறுவல் நன்முருகா!
கல்லைக் கனியாக்கும் சக்தி விநாயகனே!
தொல்லை இனித் தீர்ப்பாய் துணிந்து.

ஏழையரைக் காப்பாய் இலங்குமுத்து நாயகரே!
தாழைமணம்போல் தமிழ்மணக்கச் செய்தருள்க!
கோழை மனம்மாற்றிக் கோடீஸ் வரனாக்கு!
வாழையடி வாழையென வாழ்ந்து.

ஐயமின்றிச் சொல்வேன் அனைத்துலகும் போற்றுகின்ற
தெய்வத்தின் தெய்வம்நீ சீக்கிரமே வந்தருள்க
பெய்வானைப் போலப் பிறர்க்குதவி செய்தருள்க
மெய்யாக என்பால் மிகுந்து.

ஒழுக்கத்தில் என்னை உயர்ந்தவனாய்ச் செய்க
அழுக்கா(று) அடையா அகமெனக்க ருள்க
வழுக்கியும் தீயசொலா வாய்மை அருள்க
விழுப்பமே நல்குவாய் விரைந்து.

ஓகையுடன் என்மனைவி நன்மக்கள் காப்பாய்
வாகையுடன் மக்களெனை வாழ்த்துமாறு செய்வாய்
காகையுடன் சுற்றம் கலந்துவரச் செய்வாய்
ஈகையினால் என்றும் இசைந்து.

ஔவைதிரு வள்ளுவனார் அன்புமொழி என்விழிகள்
கௌவி நலமடையக் காதல் மனைவியுடன்
நௌவிமான் இன்பம் அறம்பொருள் வீடுபெறும்
சௌபாக்யம் ஈவாய் தழைத்து.

## நூற்பயன்

ஆலங் குடிசோலை (வி)நாயகரின் இப்பதிகம்
காலம் தவறாமல் காலையும் மாலையும்
சீலமுடன் பாடுவார் சீரெல்லாம் கூடுவார்
ஞாலமதில் வாழ்வார் நயந்து.

## வாழ்த்து

திருப்பணிகள் செய்தநட ராசரிவர் வாழ்க!
விருப்புடனே நற்பதிகப் பாவலரும் வாழ்க!
உருப்படியாய் எவ்வுலகும் எவ்வுயிரும் வாழ்க!
திருப்படியாய் வாழ்க திகழ்ந்து.

## தந்தருள்க

தேவுலகம் சிந்திக்கும் வேலப்பன் வந்திக்கும்
நாவுலகச் செல்வருடன் சோலை முத்து நாயகரே!
பூவுலகம் போற்றுமாறு பாவுலகம் தந்தருள்க!
மூவுலக நாயகியே முன்பு.



# ஆலங்குடி சோலைவிநாயகர் போற்றிகள் 108



ஓம் அன்பேஎன் ஆருயிராய் அமர்ந்தவனே போற்றி
,, ஆலங்குடி சோலை விநாயகரே ,,
,, இரட்டை விநாயகராய் எழுந்தருள்வீர் ,,
,, ஈகையுடன் வாகை இணைந்தருள்வீர் ,,
,, உண்மைநல் வாய்மைஎன் மெய்ம்மையே ,,
,, ஊக்கமுயர் நோக்கத்தின் ஆக்கமே ,,
,, எப்போதும் காத்தருளும் எம்பெருமான் ,,
,, ஏழையர்க்கு உதவுகின்ற இறையவனே ,,
,, ஐயமெலாம் தீர்க்கின்ற தெய்வமே ,,
,, ஒழுக்கத்தின் மேன்மையால் உயர்த்துவாய் ,,
,, ஓங்காரப் பொருளறியப் பாங்காவாய் ,,
,, ஒளவைமொழி நல்வழியில் செல்லவைப்பாய் ,,
,, அஃகாமை வெஃகாமை எஃகருள்வாய் ,,
,, கல்வியுடன் நற்செல்வம் கலந்தருள்வாய் ,,
,, காட்டும்ஒளி எனக்கென்றும் கூட்டுவாய் ,,
,, கிளிபோல இயற்றமிழும் மொழியவைப்பாய் ,,
,, கீழோர்க்கும் நல்லறிவு தந்தருள்வாய் ,,
,, குடும்பத்தைக் காத்தருள்வாய் குலமகனே ,,
,, கூடுகுயில் பாடுமிசைத் தமிழருள்வாய் ,,
,, கெஞ்சாமை அஞ்சாமை தந்தருள்வாய் ,,

ஓம் கேடறியா வண்ணம் எம்நாடருள்வாய் போற்றி
,, கைம்மாறு வேண்டா வான்மழையருள்வாய் ,,
,, கொலை, களவுசெய்யாத மனமருள்வாய் ,,
,, கோடையின் நீராக வந்தருள்வாய் ,,
,, கௌதமரின் நல்லமனம் தந்திடுவாய் ,,
,, ''ங''ப்போல் வளையவும் நலமருள்வாய் ,,
,, சந்தனமாய்ப் பன்னீராய் மணக்கவைப்பாய் ,,
,, சான்றோனாய் ஈன்றோரைக் கேட்கவைப்பாய் ,,
,, சிரித்தமுகம் என்றைக்கும் தந்திடுவாய் ,,
,, சீரோடும் பேரோடும் திகழவைப்பாய் ,,
,, சுபலாபம் சுகமாகத் தந்திடுவாய் ,,
,, சூரியனாய்ச் சந்திரனாய் ஒளியருள்வாய் ,,
,, செல்லுமிடம் வெல்லுமிடம் ஆயருள்வாய் ,,
,, சேரிடம் அறிந்தென்னைச் சேரவைப்பாய் ,,
,, சைகோன் சண்முகனார் அண்ணனே ,,
,, சொல்லுதமிழ் உலகமெலாம் கொள்ளவைப்பாய்,,
,, சோடையின்றி வாடையின்றித் தோன்றவைப்பாய்
,, சௌபாக்கியம் அத்தனையும் தந்திடுவாய் ,,
,, ஞமலியென வயிரவனார் நன்றியருள் ,,
,, ஞாயிறெனப் பாயிருளைப் போக்கிடுவாய் ,,
,, நிமிர்ந்தநடை நேர்கொண்ட பார்வைதா ,,
,, தவம்போற்றும் சிவமாகச் செய்தருள்வாய் ,,
,, தாயாரை வாழ்வாங்கு வாழவைப்பாய் ,,
,, திருக்குறளாய் உலகிலெனைத் திகழவைப்பாய்,,
,, தீயாரைக் காணாத திறமருள்வாய் ,,

ஓம் துணிவும் பணிவும் நற்கனிவும்தா போற்றி
,, தூயநல் ஆடைதினம் அணியவைப்பாய் ,,
,, தெய்வத்தின் தெய்வமாய்த் திகழ்பவரே ,,
,, தேடரிய பொருள்ஏடும் எழுதவைப்பாய் ,,
,, தைத்திங்கள் நெய்ப்பொங்கல் தண்டமிழர் ,,
, தொடுக்கும் கடவுள் என்பாடலே ,,
,, தோற்றமிகு ஏற்றமுடன் தோன்றவைப்பாய் ,,
,, தௌவரே இல்லாத வாழ்வருள்வாய் ,,
,, நலமாக நிலங்காக்கும் புலமருள்வாய் ,,
,, நாடுமொழி இனப்பற்றின் பீடருள்வாய் ,,
,, நினைஎன்றும் நினைக்கின்ற நெஞ்சருள்வாய் ,,
,, நீராகி நெல்லாகி நிறைந்தருள்வாய் ,,
', நுண்ணறிவால் உன்னருளை நோக்கவைப்பாய் ,,
, நூறுண்டின் மேலாக வாழவைப்பாய் ,,
,, நெஞ்சமர்ந்த காதல் நிறைவேற்றுவாய் ,,
,, நேசமுடன்பல தேசம்பார்க்க வைப்பாய் ,,
,, நைபவர்க்கு உதவுமனம் தந்தருள்வாய் ,,
,, நொடிப்பொழுதில் படிப்பறிவை ஊட்டுவாய் ,,
,, நோயின்றிப் பல்லாண்டு என்மெய்காப்பாய் ,,
,, நௌவிமான் போலமன மென்மைதா ,,
, பலவான்குடிப் புலவரெனைப் பார்த்தருள்வாய் ,,
,, பார்த்தால் பசிதீரும் பண்பருள்வாய் ,,
, பிழைஏதும் செய்யாது காத்தருள்வாய் ,,
,, பீர்க்கம்பூ காய்கறிகள் பயிர்விளைப்பாய் ,,
,, புரிந்தாறு சுவையமுதம் தெரிந்தருள்வாய் ,

ஓம் பூச்செண்டாய்ப் பொன்வண்டாய் எனைக்காப்பாய்
,, பெய்வானுய் தெய்வானை காத்திடுவாய் போற்றி
,, பேரோடு வள்ளியம்மை சீர்காப்பாய் ,,
,, பையவரும் தென்றலெனப் பழகவைப்பாய் ,,
,, பொன்னுடை போர்த்திளைப் புகழவைப்பாய்,,
,, போற்றுகின்ற நல்லவர்தம் நட்பருள்வாய் ,,
,, பௌவநீர் உலகனைத்தும் வாழவைப்பாய் ,,
,, மனம்போல மாங்கல்யம் தந்தருள்வாய் ,,
,, மாலையுடன் வேலையுடன் மகிழவைப்பாய் ,,
,, மிளிர்கின்ற திருப்பணிசெய் நகரத்தார் ,,
,, மீக்கூறும் உழைப்புடையார் மேலாண்மை ,,
,, முத்தமிழின் வித்தகனுய்ச் செய்தருள்வாய் ,,
,, மூவுலகும் போற்றதமிழ் அரசளிப்பாய் ,,
,, மென்மையுடன் பெண்மையினை வாழவைப்பாய் ,,
,, மேன்மையுடன் ஆண்மையினைக் காத்தருள்வாய்,,
,, மைஎழுதும் மாணவர்க்கு மாண்பருள்வாய் ,,
,, மொத்தமாக ஆசிரியர் நலங்காப்பாய் ,,
,, மோசமின்றி வாணிகங்கள் நடக்கவைப்பாய் ,,
,, மௌனமுடன் கோபமின்றி வாழவைப்பாய் ,,
,, யவனராய் மானவீரம் தந்தருள்வாய் ,,
,, யாவர்க்கும் அருட்பெருஞ் சோதியே ,,
,, யிலங்கிடும் தனிப்பெரும் கருணையே ,,
,, யிர்க்கும் விஞ்ஞானம் மெய்ஞானம்தா ,,
,, யுவான்சுவாங் யுவராசன் அழகருள்வாய் ,,
,, யெங்கும்நன் மங்கலமேதங்க வைப்பாய் ,,

ஓம் யேந்தலாய்மாந்தர்க்குப்போந்தருள்வாய் போற்றி
,, யொற்றுமை ஒருமைநற் பெருமைதா ,,
,, யோகமும் போகமும் தந்தருள்வாய் ,,
,, அரங்கெல்லாம் முழங்குதமிழ் விளங்கவைப்பாய் ,,
,, அராஜகமே தோன்றாமல் அழித்திடுவாய் ,,
,, அரிஓம் நன்றாகக் குருவாழ்க ,,
,, அரைகுறையை முறைநிறையாய் ஆக்குவாய் ,,
,, அரோஹரா! சரணமய்யா! ஆண்டவனே ,,
,, வழங்குபால் ஆடுமாடு வளமருள்வாய் ,,
,, வாயாரத் தேவாரம் பாடவைப்பாய் ,,
,, விநாயகர் அகவல் திருவாசகமே ,,
,, வீரமுடன் ஈரமுடன் விளங்கவைப்பாய் ,,
,, வையமெலாம் காத்துவரும் சோலைசெல்வ
விநாயகர்தம்
வானோர்ந்த திருவடிகள் போற்றி போற்றி

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்
சோலைவிநாயகர் துணை

வாழ்க தமிழ்க்கனி வளர்க திருப்பணி

நாள் : தி.பி. 2017 (அட்சய) கார்த்திகை 26
(12—12—86) வெள்ளி

இடம் : ஆலங்குடி சோலைவிநாயகர் திருக்கோவில்
திறந்தவெளி அரங்கம்

---

# பட்டமளிப்புப் பாராட்டிதழ்

---

*பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம் கல்லல் ஒன்றியம் ஆலங்குடி சோலை விநாயகர் திருஅருளால் அத்திருக்கோவில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாவில்* (12—12—86) *அவ்வூர் அரசுப்பள்ளியின் தலைமைத் தமிழாசிரியர்* பலவான்குடிப் புலவர் பேராசிரியர் வே. வே. வே. வேலப்ப செட்டியார் *அவர்களுக்கு ஆலங்குடிப் பொதுமக்களும், ஆலயத் திருப்பணிக் குழு வினரும், அரசுப்பள்ளியின் ஆட்சிக் குழுவினரும் அன்னாரின் சமூக நல்லியல்புகளையும், தொண்டினையும், பாராட்டிப் பொன்னாடை போர்த்திச் சீராட்டித்* "தண்டமிழ்த் தொண்டர் தன்மானப் பொன்மான்" *என்ற கௌரவப் பட்டம் அளித்துச் சிறப்பித்து வாழ்த்தி வழங்கிய* "பட்டமளிப்பு வாழ்த்துப்பா"

''என்கடன் நற்பணிகள் செய்து கிடப்பதே"
என்பதையே தன்கடனாய்க் கொண்ட பெருந்தகையீர்!
திங்கள் இருபதின்முன் சேர்ந்தீர்எம் பள்ளியிலே
தங்கள் வருகையோ தண்டமிழ்த்தாய் நல்வரவாம்!
கங்கையெனப்பொங்கி இமயமென ஓங்கித்தாம்
மங்கலங்கள் சேரமனம் கொண்டீர் வாழியவே!
நாமார்க்கும் என்றும் குடியல்லோம்' என்ற அப்பர்
சேமமுறச் சொன்னபடி சீரான வீரமுடன்
நேர்மைத் திறத்தோடும் நெஞ்சில் அறத்தோடும்
கூர்மைத் தமிழறிவால் மாணவரைத் தாம்கவர்ந்திர்
வந்த மூன்று திங்களுக்குள் வந்த (அ)ரசுத் தேர்வினிலே
செந்தமிழ் மட்டுமின்றிச் சேர்ந்த பிறவும் நடத்திக்
கல்லல் வட்டாரத்தின் எல்லாநற் பள்ளியினும்
மல்லல் மதிப்பெண்ணால் போட்டி முதல் நற்பரிசும்
சென்றாண்டு சென்னையிலே செந்தமிழின் நற்கழகம்
நன்றாய் நடத்திய போட்டி தமிழ்த் தேர்வினிலும்
மாகாண எல்லையிலும் மாண்பாய்ப் பரிசு பெறப்
பாகான செந்தமிழால் பக்கதுணை ஆகிநின்றீர்!
என்பதை யாம் அறிந்தோம்; இன்புற்றோம்; ஆதலினால்
மன்பதையும் தான்அறிந்து மட்டிலா மகிழ்ச்சிகொளக்
கண்டார் முகமலரக் காணார் அகமலரத்
''தண்டமிழ்த்தொண்டர் தன்மானப் பொன்மான்" என்று
பட்டம் அளித்தும்மைப் பாராட்டிப் போற்றுகிறோம்

எட்டிசையும் வாழ்க இசைந்து திருவருளால்
எங்களூர் வந்து உவந்து எங்களுடன் ஒன்றுனீர்
திங்களும் ஞாயிறும் போல் செம்மாந்து வாழியவே!
சங்கத்தமிழ் காத்தும் தங்கள் இனம்காத்தும்
மங்கலமாய் வாழ்க மகிழ்ந்தென்று வாழ்த்துகிறேம்
நற்பதிகப் பாவலரே! நந்தமிழின் காவலரே!
கற்பனையின் ஒவியமே! கம்பனவன் காவியமே!
அற்புதமாய்ச் செந்தமிழ்வாய் ஆர்தந்த சீர்தனமோ
கற்புடைய நும்மனைவி லெட்சுமியாம் ஆச்சியவர்
மாட்சியுடன் தந்ததுவோ; அன்னையாம் பொன்னம்மாள்
ஆட்சியிஞல் வந்ததுவோ; ஆண்டவஞர் பேரருளோ
நாவலரே! தங்கள் நயந்த தமிழ் வியந்தே
ஆவலுடன் போற்றுகிறேம் ஆர்ந்திங்கு சேர்ந்தே
பொதுமக்கள் நன்ருய்! பொருள் அருள் மீந்து
புதுமகனே வாழ்க பொலிந்து. மலிந்து புகழ்ச்
சொல்லாண்ட வில்லாண்ட நெல்லாண்ட மூவரைப்
பல்லாண்டு வாழ்க பரிந்து.'' போல்

என மனமார வாழ்த்திப் போற்றி வழங்கும்,
— ஆலங்குடி கிராமத்தார்கள்

—(சிங்கப்பூர்) பழ. நடராசன் அம்பலம் அவர்கள்
திருப்பணிக்குழுத் தலைவர் &
அரசுப்பள்ளி ஆட்சிக்குழுத் தலைவர்
ஆலங்குடி — 623 307

" செய்ந்நன்றி அறிதல் "

## வாழ்த்துப்பா

ஒன்றி உயர் பட்டம் பொன்ஆடை போர்த்திக் கௌர
வித்தீர் !
நன்றி மழையில் நனைந்தும்மைப் போற்றுகிறேன்
கொண்டாடும் ஆலங்குடியார்கள் தாம் வாழ்க!
தண்டமிழாய் என்றும் தழைத்து.

இப்படிக்குத் தங்கள் செய்நன்றி அறியும்
அன்புள்ள
வே. வேலப்பன்
புலவர், பி. ஓ. எல்., பி. டி., பி. லிட்.,
எம். ஏ., (தமிழ்) எம். ஏ (ஆங்கிலம்)., ரா. பா. (இந்தி)

முழுஉரிமை அமைப்பாளர் :

1 "அன்னை பொன்னம்மாள் பதிப்பகம்"
2 "தந்தை வேலப்பர் நூலகம்"
3 "பலவான்குடிப்புலவர் மன்றம்."
4 "பூவையர் பூங்கா".
5 "சன்மார்க்கசங்கம்"

செயலகம் :

வே. வே. வே. மனை.
பலவான்குடி - 623 208
(வழி) உ. சிறுவயல் ப. மு. மாவட்டம்

